சிவமயம்

முருகன் துணை.

# முருகன் முறையீடு,

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு — தமிழ்மறை


கலைமாமணி தமிழ்மறைக்காவல

திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கள் இயற்றியது.


1935




திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,

154, டி. டி. கே. சாலை, சென்னை-18.

1988

# படையல்

திருக்குறளாரின்

தந்தை அ. வீராசாமிப்பிள்ளைக்கும்
தாயார் வீரம்மாளுக்கும்

# சாற்றுக் கவிகள்

திரிசிரபுரம்
செயின்ட் ஜோசப் காலேஜ் தலைமைத் தமிழாசிரியரும்
திரிசிரபுரம் தமிழாசிரியர்கள் சங்கத்தின் தலைவருமான
உயர் திருவாளர் திரு. மு. நடேச முதலியார் அவர்கள்
பாடியது.

நேரிசை வெண்பா.

முருக னடிக்கண் முறையீ டொன்றைப்
பெருகன்பாற் கூறினான் பெம்மா — னருள்கூர்
முனிசாமி யென்னும் முனிவில் குணத்தா
னினிதாக வேநன் கிசைந்து.

———

திரிசிரபுரம் சோட சாத்துவயாவதான மகாவித்துவான்
அ: இராமலிங்கம் பிள்ளை அவர்களின் குமாரரும்,
திரிசிரபுரம்
சூசையப்பர் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியருமான
உயர்திருவாளர்
வித்துவான் திரு. இ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை
அவர்கள் பாடியவை.

—0—

அறுசீர் விருத்தம்:

எண்ணரிய புகழாளன் எங்கள்வீ
ராசாமி யினிதி னீன்ற
கண்ணியனாஞ் செந்தமிழின் கரைகண்டோன்
ஆங்கிலமும் கவினப் பெற்றோன்

உண்ணயந்தே முருகனடிக்கன் புடையோன்
முனிசாமி உவந்து நாளும்
பண்ணியலும் அவனடிக்கே முறையிடொன்
றிட்டுநலம் பெற்றான் மாதோ.

### நேரிசை வெண்பா

முருகன் முறையிட்டை முற்றுணர நாளும்
பெருகும் அவனருளே பின்னை — மருவிடவே
நல்லறிவுற் றோங்கிநலம் நாயகமாய் நானிலத்தில்
வல்லவராய் வாழ்வர் வகை,

— ௐ —

## சென்னை "திருப்புகழமிர்தம்" ஆசிரியர்
## காங்கேயநல்லூர் திருப்புகழ் பக்த பாததூளி
## குகஸ்ரீ கிருபானந்தவாரி அவர்கள் பாடியவை.

### அறுசீர் விருத்தம்

இருமைநல மினிதுபெற விழைந்துமுனி
சாமியெனு மிளைய செம்மல்
தருமருவு மரிமகனைத் தளைநீக்கி
யரிமகனைத்தளைசெய் தாண்டே
ஒரு மொழியைக் கற்றவர்கள் புகழ்ந்தேத்தக்
கற்றவர்கொ ளொருவற் கீந்த
திருமுருகன் முறையீட்டைச் செழுந்தேன்போற்
செந்தமிழாற் செப்பி னானால்

### நேரிசை வெண்பா.

மறையா யிரமேத்தும் வள்ளல் முருகன்
முறையீட்டை யன்பாய் மொழிந்தான்—பொறையார்
புகழ்வீரா சாமிப் புதல்வனருட் போதந்
திகழுமுனி சாமிநலஞ் சேர்ந்து.

திரிசிரபுரம் அர்ச் சூசையப்பர் காலசாலைத் தமிழாசிரியர்
உயர் திருவாளர் வித்துவான் திரு. ஐயன்பெருமாள் கோனார்
அவர்கள் பாடியவை.

### அறுசீர் விருத்தம்:

சீர்சான்ற வேதசிவா கமங்களினுண் மைப்பொருள்சேர்
செவ்வி வாய்ப்ப
ஏர்சான்ற மனக்குறைக ளிவையெனமேற் கோள்நிறுவி
யெவரு மெச்ச
நேர்சான்ற வேல்முருகன் முறையீடாச் செப்புமிந்நூ
னெறியிற் றந்தான்
பேர்சான்ற திரிசிரமா புரம்வாழும் முனிசாமிப்
பெரியோன் மாதோ.

இப்பெரிய நூலதனை வாசிப்போர் தமிழ்மொழியி
னேற்றத்தோடே
ஒப்பரிய மயில்வீரன் அருள்பெற்று நலந்திகழு
முயர்வு கொண்டு
செப்பரிய நான்மறையி லாகமத்திற் சாத்திரத்திற்
சிறக்கக் கூறும்
மெய்ப்பொருளி னுண்மையுணர்ந் துயர்ஞானச் செல்வர்களாய்
விளங்கு வாரே.



இந்நூலாசிரியரது சகோதரரும் திரிசிரபுரம்
ரயில்வே போலீஸ் ஆபீசில் வேலை பார்த்துவருபவருமான
உயர்திருவாளர் வீ. தியாகராஜப் பிள்ளை
அவர்கள் பாடியது.

### அறுசீர் விருத்தம்

பொங்கிவளர் அன்புடையோன் பொறையுடையோன்
பூதலத்தில் புகழே கொண்டோன்
எங்களுயர் தந்தையெனும் எழில்வீரா சாமிமனம்
இசைந்தே நாளும்

திங்களணி முடியான்சேய் தாள்பணியும்
முனிசுவாமி தீந்தே னென்ன
தங்குயர்பைந் தமிழ்மொழியால் முறையீடொன்
றிட்டுவந்தான் தரணி மீதே.

—0—

இந்நூலாசிரியரின் ஆப்த நண்பரும் பிரதம
நன்கொடையாளருமான உயர் திருவாளர் ச. இராமநாதய்யர்
அவர்கள் எழுதியது.

அன்பார்ந்த நண்ப!

"பொற்குடத்திற்குப் பொட்டிடவும் வேண்டுமோ" என்றாற் போல தங்களுடைய நூலுக்கு எனனுடைய இச் சிறுவுரை மிகையென்றே நினைக்கின்றேன். தாங்கள் பக்தி மார்க்கத்தில் நின்று தமிழ் வளர்க்க முற்பட்டதை யுன்னி அகமகிழ்கிறேன். தாங்கள் தமிழ்நாட்டின் பெரியார்களி லொருவராகத் திகழவேண்டும் என்று விழைந்து நிற்கும்,

ஆண்டார் வீதி,
திரிகிரபுரம்.
1935

தங்கள் அன்புள்ள

எஸ். இராமநாதன்.

உ

சிவமயம்

முருகன் துணை

# முருகன் முறையீடு

கணபதி காப்பு

வெண்பா

வேத விநாயகனே வித்தகனே விண்ணவர்கள்
ஓதுந் தலைவனே ஒண்பொருளே—நாதங்
கடந்தோனே வேலேந்துங் கந்தன் புகழுக்
கிடந்தா வரந்தா விசைந்து.

## (நூல்)

ஆசிரிய விருத்தம்

உலகமெய்ப் பொருளாய் ஓங்கி உயிர்க்குளோ ருயிராய் நிற்கும்
குலவுவெண் மதியாற் கோதுங் குருபரா பரனே நின்றாள்
மலரிணைச் சதமென் றேத்தும் மறைமொழி யறியா நாயேன்
நலனுறு மார்க்கஞ் செப்பாய் நாயகா முருக வேளே.

குன்றின்மீ தாடு கின்றாய் குகனெனப் பெயருங் கொண்டாய்
சென்றுமுன் வேடர் தங்கள் செல்வியை மணந்தாய் நன்று
அன்றொரு அன்பன் தந்த அருட்புகழ் மாலை பெற்றாய்
இன்றுமோர் முறையீ டேற்றிவ் வேழையேற் கருளு கெந்தாய்.

தந்தைதாய் தமரு முற்ற சற்குரு தெய்வம் நீயே
முந்தையூழ் வினையால் பாவ மொய்த்திடத் தவிக்கு மென்றன்
சிந்தையை மாற்றித் தெய்வத் திருவருள் புரியா தேனோ
எந்தையே அடியார் கோரு மின்பமு தூட்டுந் தேவே.

இம்மைவாழ் வின்னல் போக்கும் இன்னருள் தருவாய் முன்னர்
வெம்மைநோய் நீக்கி மெய்ம்மை வித்தகப் பொருள்போ
திப்பாய்
செம்மையாம் சிறந்த வாழ்வும் செழிப்புறு வரமுந் தந்த
அம்மையே! உமையா ளீன்ற அண்ணலே அமரர் கோவே.

கண்ணகல் புவன மீதில் கயவனென் றிழிபே ருற்றுப்
பண்ணருங் கொடிய பாவப் பழிச்செயல் செய்து வீண்பொய்ப்
புண்மனத் தவனாய்ப் பல்லோர் புன்சொலுக் கிடமாய்
நின்றேன்
தண்ணருள் தந்தாள் ஐயா! தனிப்பெருங் கருணை வாழ்வே.

மந்திரஞ் சொல்லேன் பாழு மனதையோர் நிலையில்வையேன்
யந்திரக் கால்போல் சுற்று மியல்பினை யொடுக்க லாற்றேன்
வந்தனை பயின்று நின்சே வடிபுகும் மார்க்கங் காணேன்
சுந்தர வதன லீலா சோதியாய்த் துலங்குந் தேவே.

கற்றவர் தம்மை நாடிக் கலைபல தெளிந்தே னில்லை
நற்றவப் பெரியோர் கூறும் நல்லுரை கேட்டே னில்லை
பற்றினை விட்டே னில்லை பவத்தொழில் மறந்தே னில்லை
எற்றினிப் பிழைப்ப தேயான்? எந்தையே இமையோர் தேவே.

வஞ்சக மக்கள் தம்மின் மருவிய வாழ்வை யெண்ணி
அஞ்சினேன் மனம் பதைத்து அலறினேன் உலரி நாயேன்
தஞ்சமென் றடைந்தே னின்றாள் சரவணப் பொய்கை யானே
பஞ்செ‌ன அலையா வண்ணம் பரிந்தெனக் கருள்செய் வாயே.

புவிதனில் மேல தென்று புகழ்தரும் பொன்னை நாளும்
சவியுறத் தெளிந்து பன்னூல் தனையுணர்ந் தாய்ந்த வேழைக்
கவிகளுக் கீயா வஞ்சக் கயவர்கள் தம்பால் செல்வக்
குவியலைப் படைத்தா எந்தாய் கொள்கையீ தழகி தேயோ?

அறஞ்செய விரும்பேன் ஆன்றோ ரருளிய வாய்மை கேளேன்
மறந்துநின் னடியார் கூட்ட மரபினில் சேரேன் பாவம்
துறந்தற நெறியில் நில்லேன் தொழுகிலேன் துணையா
நின்றாள்
திறம்பெற வேண்டி நின்றேன் திருமலை திகழுந் தேவே.

ஐம்புல னடக்கி யாளும் அருங்குணம் பயின்றே னில்லை
வம்பிடு கயவர் கூட்ட வரம்பினின் றகன்றே னில்லை
நம்பிநின் னடிய னாகும் நல்வழி யுணர்ந்தே னில்லை
எம்பிரான் கருணை கொண்டிவ் வேழையேற் கிரங்கா தேனோ.

தெருள்நிறை அமுதே நின்பால் சேர்ந்திடா துலக வாழ்வாம்
இருளெனு மாயை தன்னை இன்பமென் றுணர்ந்து துன்பக்
கருவையுற் றவலங் கொண்டேன் கதியிலாப் புழுவைப் போல
அருளெனக் களிப்பாய் மேரு அண்ணலே அமரர் தேவே.

மன்னனாய் வாழ்வோ மென்றும் மதிமிகப் படைத்தோ மென்றும்
பன்னல முடையோ மென்றும் பாரினிற் பெரிய மென்றும்
தன்னலங் கொண்டு கர்வம் தலைப்பிடித் தாடு மென்றன்
இன்னலைத் தீர்ப்பாய் செந்தில் இனிதுறை முருக வேளே.

பருந்தென் அலைவேன் பாரில் பழிச்சுமை சுமந்தே யாருந்
துரும்பென மதிப்பேன் வீணில் தூற்றுவேன் நின்னைக் காண
விரும்புநின் னடியார் தம்மை வெறுத்துரை செய்வேன் என்னின்
திருந்துமோர் மார்க்கங் கூறாய் திருகரப் புரம்வாழ் தேவே.

சிவனடி யார்க ளென்று செப்புவர் செப்பு முன்னர்
புவனமே யுண்ட மாயோன் புண்ணிய புருஷர் என்பர்
குவலய மீதில் வீண்பொய்க் குற்றமே செய்து நாளும்
அவமதாய்க் கழிப்பர் அந்தோ! அருள்வழி யறியார் என்னே,

கடுஞ்சினங் கொள்வேன் மூர்க்கக் கயவரில் கடைய னாவேன்
அடுமதக் களிறே யென்ன அலைகுவேன் அறிஞர் தம்முன்
ஒடுங்கிநின் றவர்கள் பேசும் ஒண்பொருள் ஓரேன் யாரும்
நடுங்கிடத் தீச்சொல் கூறும் நாயினேன் உய்வ தென்றோ.

பொய்ம்மையே புகல்வேன் சாந்தப் பொறைகொளேன் புகழ்பெற் றோங்கும்
மெய்ம்மையே பயிலேன் மேலோர் மேவுறு நெறியுந் தேடேன்
வெம்மையாங் கொடிய கோபம் விரைவினில் கொள்வேன் வீணன்
எம்மையா தரிக்கக் கோவே இறைஞ்சினே னேழை யேனே.

மறைவழி நிற்கும் நீதி மறையவர் மருங்கே செல்லேன்
பிறரெனைப் புகழக் கேட்டுப் பேதைமை யுற்று நிற்பேன்
குறையெடுத் துரைத்தால் வெய்ய கொடுஞ்சினங் கொள்வேன் வானோர்
இறைவனே நெறியொன் றோதி ஏழையேற் கருளு வாயே.

உண்ணவு முணவு மற்றும் உடுக்கவோ ருடையு மின்றி
எண்ணிலா வின்னல் சூழ ஏங்கிவாழ் வறிஞர் தம்மை
கண்ணிலும் நோக்கார் தங்கள் கருமமே பெரிதாக் கொண்டு
மண்ணிடை வாழும் பொல்லா மக்களைப் படைத்தீ ரேனோ.

செந்தமி ழுண்மை கண்டு தினந்தொறு மாய்ந்து நன்கு
முந்திடும் ஊக்கங் கொண்டு முதுமையே தழுவி ஆண்மை
தந்திடும் அமிழ்தின் மிக்க தண்டமிழ் தன்னை யோதார்
அந்தகற் போல்வார் அந்தோ அவனியில் அறிவி லாரே.

இயற்கையே புவன மென்பர் இறைவனொன் றுண்டோ
வென்பர்
செயற்கையே உயர்வா மென்பர் தீஞ்சுவை நூல்க ளெல்லாம்
வியர்த்தமே யென்பர் வெல்ல வகையறி யார்கள் உண்மை
கயற்கணாள் உமையா ளீன்ற கந்தனே கழறு வாயே.

உண்ணுவ ரல்லர் நல்ல உடையுடுப் பவரு மல்லர்
நண்ணுவ ரல்லர் பக்தி நாத்திகச் செயலே செய்வர்
எண்ணிலாத் தீமை யெய்தி ஏழைமீ திரக்கங் கொள்ளாக்
கண்ணிலாக் கயவர் தம்பால் கந்தனே பொருளேன் தந்தாய்.

ஆலயஞ் செல்லா ருந்தன் அருள்பெற வாசை கொள்ளார்
வேலடுங் கண்ணார் தம்பின் வீணரா யலைவர் வெய்ய
காலனார் கொடும்பா சத்தால் கலங்குவ ரந்தோ ஏழைப்
பாலரைப் படைத்தீ ரேனோ பழநியம் பதிவாழ் கோவே,

ஒழுக்கமே கொள்ளார் மேலோர் உயர்குணந் தழுவார் தீய
அழுக்கறத் தூய வாழ்வும் அறநிறை நெறியுங் காணார்
இழுக்குதற் கஞ்சார் செல்வம் ஈட்டலே குறியாக் கொள்வர்
வழுக்கியே அறவாழ் வெய்தும் வகையறி யார்கள் அந்தோ.

வள்ளுவப் பெரியார் கூறும் வாய்மொழி கேளார் பெற்ற
உள்ளுயி ரனைய நூல்கள் உண்மையைக் காணார் பின்னர்
எள்ளுவர் அறிஞர் தம்மை எதிர்த்துதாம் எதிர்வா தாடித்
துள்ளுவர் தாமே கற்ற துரையெனச் சழக்கர் மாதோ,

ஒருதொழில் செய்வர் ஆங்கே உறுஜெயம் பெற்றா ராயின்
பெருமைபெற் றலைவர் தாங்கள் பீடுடன் முயன்றோ
மென்பர்
கருதியப் பணியில் வென்றி காண்கில ராகில் வீணில்
முருகனே கெடுத்தா யென்று முறையிடு வார்கள் அந்தோ.

புண்ணியா! உலகில் மாந்தர் பொருளுடை யார்கள் தம்பால்
நண்ணுவர் வார்த்தை யின்பம் நவின்றவர் பொருள்ப றிக்க
எண்ணுவர் முடிவில் எண்ணம் இசையிலென் றழுக்கா றுற்றுப்
பண்ணுவர் தீமை என்னே! பாதகச் செயல்கொண் டாரே.

எண்ணுவ ரொன்று முன்னே இயம்புவர் வேறு பின்னே
நண்ணியே வந்தே மென்பர் நண்பனே யென்பர் ஒன்றை
எண்ணியே நிற்பர் ஆங்கு எண்ணுவ தடையா ராகில்
மண்ணிடை தூற்றி நிற்கும் மாந்தருக் கென்சொல் கேனோ.

பூதல வாழ்வில் உண்மைப் பொருளறி கில்லேன் அந்தோ!
வேதனை என்றே பண்டை விதியினை நொந்தேன் பாவி
தீதறு மெய்மை நாடேன் தீங்குகள் பலவுஞ் செய்தேன்
நாதனே இனியிந் நாயேன் நல்வழி அடைவ தென்றோ.

ஊக்கமும் உணர்வு மில்லா வுடம்பினை யோம்பி நாளுந்
தூக்கமே குடியாக் கொண்டு சோம்பலே துணையாய்
நின்றேன்
நீக்கிட வழியுந் தேடேன் நினைமறந் தேனை மாசு
போக்கிநின் னருள்தந் தாள்வாய் புண்ணியா புலவர் கோனே.

சாதியில் உயர்ந்தோ மென்பர் சாத்திரங் கற்றோ மென்பர்
நீதியில் மிகுந்தோ மென்பர் நின்னருள் பெற்று வேதம்
ஓதியே வாழ்வோ மென்பர் உரைப்பதே வாய்மை யென்பர்
வேதியர் யாமே யென்பர் வீணர்கள் செயலோ வேறே.

வாதுகள் பலவுஞ் செய்தேன் வகைதெரிந் துலகில் உய்யும்
ஏதுகள் அறிந்தே னில்லை இழிகுலப் பேதை யானேன்
சூதுகள் செய்தேன் சான்றோர் சொல்லரும் வாய்மை கேளா
தீதுறு மனத்தே னானேன் செய்வதொன் றறியேன் அண்ணால்

இச்சக வாழ்வி னற்ப இயல்பினை விழைந்து நின்றேன்
அச்சுக அறிவொன் றில்லா அற்பரிற் கடைய னானேன்
நச்செனத் தீச்சொல் கூறும் நவையுரை பயின்றேன் இன்றே
அச்சமில் வாழ்வு தாராய் அண்ணலே அமரர் கோவே.

அரும்பெரும் நூல்க ளாய்ந்த அறிஞர்கள் அரிதே நோய்க்கு
மருந்தெனப் பொய்மை நீக்கு மறைமொழி யுரைக்கில் ஆங்கே
பொருந்திய அன்பு கொள்ளாப் புன்மனப் பேதை யன்னார்
திருந்துமோர் மார்க்கங் கூறாய் திருகரப் புரம்வாழ் தேவே.

தானமும் தவமும் சாந்தத் தண்ணருள் பெற்று நாளும்
மானமுங் காத்து வீண்பொய் வஞ்சக மொழித்து மெய்மை
ஞானமும் பூண்டு பக்தன் நானெனக் கூறு கேனோ
வானவ ரேத்தும் பைம்பொன் வரையமர் முருக வேளே

ஆலைவாய்ச் சங்கே யென்ன அலறினன் அழுதே னந்தோ
வேலைசூழ் அவனி மீது வீணநாள் கழித்து நின்றேன்
மேலைவாழ் வறிவொன் றில்லேன் மேவிநின்
னருள்தந் தாள்வாய்
சோலைசூழ் தணிகை மேவுஞ் சுந்தரா வும்பர் கோவே.

கோதிலா மனத்தே னாகி குறைபல செய்யே னாகி
நீதியை யுணர்ந்தேனாகி நின்னருள் பெற்றே னாகி
ஓதிய வேத வாய்மை உணர்வுபெற் றுய்ந்தே னாகி
தீதிலா வழிதா னேகித் திருவரு ளடைதல் என்றோ.

வன்சொலே விளம்பி யென்றும் வாய்மையே
உரையேன் என்னின்
தன்மையே பூண்டு நின்றாள் சதமென உன்னி நாளும்
நன்மையே நாடி வார்த்தை நலம்பெறப் புரிவோர் தம்பால்
புன்மைசெய் நாயேன் சார்ந்து புகழ்பெற அருள்வ தென்றோ

அழிவுறும் யாக்கை தன்னை அணிகள்வேய்ந் துயர்த்தி நாளும்
பழியுறுஞ் செயலே செய்து பயனொன்று மறியார் பொல்லாத்
தொழிலினுக் கஞ்சார் பொய்யைத் துணையென்று
கொள்வார் மீள
வழியறி கில்லார் மேரு வரையில்வாழ் முருக வேளே.

ஆணவங் கொண்டு சான்றோர் அறவுரை கேளாப் பொல்லா
வீணர்கள் குழுவில் சேர்ந்தேன் வெறிபிடித்
தலைந்தேன் என்றுன்
மாண்பெரு சேவை தன்னில் மனமகிழ் வேனோ அன்பர்
காணுதற் கரிய செவ்வேற் கந்தனே அமரர் கோனே

கரும்பென நின்னை நாடிக் கருத்தினை நிறுத்த கில்லேன்
அரும்பொரு ளாய்ந்து பன்னூல் அறவுரை காணேன் என்றும்
துரும்பெனு நிலையில் ஆசை துறக்கிலேன் தொழுது நின்பால்
அருள்பெற ஏங்கி நின்றேன் அண்ணலே அமரர் தேவே.

மின்னலே கொடியே பைம்பூண் மெல்லியே மயிலே இன்பக்
கன்னலே கட்டித் தேனே கனியொடு கலந்த பாகே
அன்னமே அழகே யென்றன் றரற்றியே திரியும் பேதை
புன்மனப் பேயர் உய்ந்து போகுநன் னெறியோ தாயோ?

மையணி கண்ட னீன்ற மகனென வருவோய் என்றும்
ஐயரி படர்ந்து தோன்றும் அணிவிழி மடவார் தங்கள்
செய்யதாள் பணிவோர் கூட்டம் சேர்ந்திடா தருள்தந்
தென்றும்
துய்யவாழ் வளிப்பாய் செந்தின் தோன்றலே தூய வாழ்வே

திங்கனத மதமனா பாலா செப்பரு மயிலோ செய்ய
மாங்குயில் பறவை தானோ மதனெனுங் கணையில் மேவுந்
தூங்கரும் வண்டோ மானோ தோற்றமீ தறியே னென்று
ஏங்கியே சுழல்வோர் உய்யும் இன்பருள் தருவாய் எந்தாய்

மாசறு மனத்தே னாகி மாண்புறு குணத்தே னாகி
பேசரும் புலமை வாய்ந்து பேரருள் பெற்றுன் பாத
வாசமே பெரிதாய்க் கொண்டு வள்ளலே யென்றன் பாவம்
நாசமே அடைந்து வாழ நல்லறம் நவில்கு வீரே.

மாங்குயி லனைய சொல்லால் மன்வலி யழிக்கும் வண்ணப்
பூங்கொடி யனையார் தம்பின் போயுழன் றலைந்து பின்னும்
ஏங்கிநின் றலைவோர் உய்யும் இன்பருள் தருவாய் அண்ணால்!
தேங்கமழ் சோலை சூழுந் திருத்தணி உறையும் வேளே.

ஒருகண மேனு முண்டி ஒடுங்கிட்டக் காணேன் ஊனைத்
தருதிறம் வளர்க்க வேறு தவவுடல் புசிப்பேன் தீய
பெருங்கொலைத் தொழில்கள் செய்த பேதைநின்
னருள்கா ணாது
வருங்கொடுங் காலன் முன்னால் வாய்திறந் தென்சொல்
கேனோ.

சேற்றிடை யாழ்ந்தும் புன்னா யெனத்திரிந் துழலும் நெஞ்சை
மாற்றிநன் னெறியுய் வித்துன் மாசறு புகழே நாளும்
போற்றிலேன் தானம் பூசை புரிந்திலேன் என்னின் பொல்லாக்
கூற்றுவன் ஏவும் பாசக் கொடுமைகட் கென்சொல் கேனோ.

பாவிநா னென்றேன் தீய பதகனே யென்றேன் நின்னைத்
தாவினே னென்றேன் ஏனோ தாமத மென்றேன் பின்னைக்
கூவினே னென்றேன் நின்றன் குழந்தையா னென்றேன்
என்பால்
மேவிநீ அருளா தேனோ மேலவர்க் கிறைவ னாரே.

முந்தியுன் னடிபேணி முக்தியுற் றுலகுய்யும் முறைபோ தித்த
எந்தையாம்வடலூர்வாழ் ஏந்தலாம் அன்னவருக்
கினிதேயின்பம்
தந்தநீ இன்றுமொரு தமியனுக் கருள்புரியத் தயங்கு கின்றாய்
கந்தனே நின்பாத கமலமே சதமென்று கருதி னேனே

அடிமைவாழ் வகத்தி வீர ஆண்மையும் அறிவுந் தந்து
மிடிமையில் வாழ்வு மெய்தி மனமகிழ் வெற்றி பூண்டு
மிடியிலாப் பேரா னந்த மேன்மையுஞ் செய்வாய் செந்தில்
குடிபுகு மரசே ஏழைக் குறைகளைத் தீர்ப்பாய் கோனே.

## (வேறு)

திருமுருகா உமைபாலா திருச்செந்தூர்
வடிவேலா தேவா தெய்வப்
பெருங்கருணைத் தலைவா நற் பேரின்ப
மறையாளா பெருமா னீன்ற
இருமகளிர் தனைமருவும் எழிலாளா
இன்றுனையோர் எளியேன் கூவி
வருகவென் அழைத்தக்கால் வாராயோ
வந்தெனக்கு வரந்தா ராயோ.

வம்பிடுஞ்சே யானாலும் வளர்க்குந்தாய்
மனம்வாடி வருந்தி நின்று
வெம்பியழ விடுவாளோ விரும்பியுண
வளிக்கமன மிசைவா ளன்றோ
நம்பியுனை நாடிமனம் நலிந்துவினைக்
குறைதன்னை நவின்று நின்றேன்.
எம்பெருமான் கருணைதனை யேழையேற்
கருள்செய்யா திருப்ப தென்னே.

அழுதுமன மழுங்கிநின தருள்பெறவென்
னிருகைசேர்த் தண்ணா வென்றேன்
தொழுதேநின் பதங்காணா தூக்கித்தேன்
சோம்பிமனஞ் சுழன்று நின்றேன்
பழுதுகளே செய்தவனென் றுலகத்தார்
வசைகூறிப் பழிக்கா வண்ணம்
எழுதருபொன் மேனியினாய் எனையருளும்
அடியனொரு ஏழை யேனே.

சேமமுறு வழிகாணார் செய்தொழிலின்
திறனறியார் செனித்து மண்மேல்
காமிகளாய் அலைவரொரு காசுக்கும்
பயனில்லாக் கயவ ராகிப்
பாமரராய் வாடிமனம் பதைத்துருகி
உணவின்றிப் பதறி வீழ்வார்
ஏமமுறும் நன்னெறியொன் றிலையோசொல்
எழிற்றணிகை இறைவ னாரே.

தில்லையில்வா ழண்ணலருள் திருமகனே
உம்பரருந் தேவே நாயேன்
தொல்லைவினை தனிலுழலா தறநீங்கித்
தொண்டனெனுந் தூயோ னாகி

நல்லறத்தின் தலைநின்று நானென்னுஞ்
செருக்கற்று நாளு முய்ந்து
எல்லையறு பேரின்ப மெய்திடுநாள்
என்றென்றோ இயம்பு வாயே.

கண்களெனுங் கொடும்பாசக் கயிறென்னும்
வலைவீசிக் கவரும் பொல்லாப்
பெண்களெனும் விலைமாதர்ப் பேய்களினால்
பிடிபட்டுப் பிறழா வண்ணம்
பண்களொடு தமிழ்க்கூட்டி நினைப்பாடும்
பேரின்பப் பதந்தந் தாள்வாய்
தண்புனல்சூழ் திருத்தணிகைத் தல மேவும்
தாயனைய தலைவா நீயே.

சித்தமிசை குடிகொண்ட செல்வனே
சேய்க்குநின தருள்தந் தாயே
எத்தனைநா ளிருந்தாலும் இவ்வுலகில்
இன்புறும்வாழ் வெய்திப் பற்று
அத்தனையும் அறப்போக்கி அடியன்யான்
எனக்கூறி அஞ்சேன் யார்க்கும்
நித்தமுனைப் பூசிப்பேன் நிலவுலகில்
நின்பணிசெய் நெறிகொள் வேனே.

பைங்கொடியா ரிருவரின்பம் பரிந்துவக்கும்
முருகோனே பணிந்து நின்பால்
பொங்கியெழு மாவலொடு போந்தேனுன்
பொன்னடியே பொருளாக் கொண்டு
தங்கிவளர் பேறோடு தழைத்தோங்கி
அடியனெனுந் தன்மை சார்ந்து
மங்குதலில் லறிவோடு மண்ணுலகில்
வாழவருள் மகிழ்செய் வாயே.

தன்மனையா ளகமுருகித் தனித்திருக்க
அயல்மனையைச் சார்ந்து செல்லும்
புன்மனத்துப் பேதையரைப் புவனமிதில்
ஏன்படைத்தீர் பொருள்பெற் றீயா
வன்மனத்து லோபியர்கள் மனம்நாண
வரையின்றி வறியார்க் கீந்து
நன்மனத்தே னெனப்புகலும் நலமுறுநன்
னெறியொன்று நவில்கு வீரே.

புல்லரிடம் சென்றவர்கள் பொருள்வேண்டி
அவர்தம்மைப் புகழா வண்ணம்
எல்லையிலா மிகுசெல்வ மெய்தியிடும்
பேறுடனே இனிதே யார்க்கும்
இல்லையென உரையாது ஈத்துவக்கும்
புகழெனக்கிங் கின்றே தாராய்
சொல்லிலருந் தணிகையில்வாழ் செல்வமே
அம்பிகையாள் தூய சேயே.

விட்டதுபற் றென்னுமோர் வீரமெனக்
குண்டாகி விரைந்து ஞான
நிட்டையில்நின் றுன்பாதம் நிலையெனவே
போற்றிடுநன் னேயங் கொண்டு
இட்டமுறு வாழ்வதனை யிகழ்ந்துமன
முன்னடியே யேத்தும் பேறு
திட்டமுடன் அருளுவையே செல்வனெனத்
தணிகையில்வாழ் தேவர் கோனே.

வனப்பெய்தோ ரழகியளாம் பூங்கொடியாள்
வள்ளிதனை வரிக்க வெண்ணி
தினைப்புனத்தே சென்றீரத் தேவியரைக்
கொண்டின்பந் திளைத்தீ ரென்னே!
தனக்கெனவோ மனச்சோர்வு தயக்கமிலா
வூக்கமொடு தானே சென்றீர்
மனக்கவலை கொண்டின்று மயங்கியழுஞ்
சேயனெனை மறத்தல் நன்றோ

பொல்லாத பாபியெனும் போக்கரிய
பழியும்நின் புகழ்பு கன்றால்
சொல்லாம லோடுமென வேசொல்லிச்
சென்றார்கள் தூயோ ரெல்லாம்
கல்லாத மூடனொரு காலத்தும்
நின்சேவை காணா தென்னே
வல்லாள கானமகள் மணவாள
வந்தருள்செய் வயலூர் வேந்தே

ஆதுலராய் வந்தோர்க்கு அமுதளிக்கும்
பெருந்தகைமை யடைந்தே னில்லை
ஓதுறுநற் பேரின்ப நெறியூட்டும்
வேதமென்ப துணர்ந்தே னில்லை

வாதுகள்செய் புன்மக்கள் வழியேகுந்
தீயெண்ணம் மறந்தே னில்லை
ஏதுமிலா வந்தகனா பிறைஞ்சிநின
தருள்காணா தேங்கி னேனே.

## வேறு

நற்செயலி லாதவுட விச்சையே கொண்டியான்
நன்மையொரு சிறிது மறியேன்
சற்சனர்க ளில்லாத சபைகளில் கூடியே
தயங்கிமிக மனது நொந்தேன்
கற்பனைகள் செய்துலகில் கதையுரைத் தவலமாய்க்
கயவரிலோர் கயவ னானேன்
சிற்பொருளாய் ஓங்கிடுநற் செல்வமே அடியவர்
சித்தமிசை குடிகொள் வோனே.

ஓயாத கவலையும் தீராத பிணிகளும்
ஓட்டாம லோட்டி யென்றும்
பேயாக வாழ்ந்துபொய் பிர்மையினில் சிக்கியே
பேதமுற் றுழன்று திரியா
சேயாக மாற்றியென் சிந்தைமகிழ் நல்வரம்
செல்வனே தருக வருவாய்
தாயான கௌரியாள் தனயனென்னுங் கந்தனே
தையலார் மகிழு வோனே

சித்தமோர் நிலையிலா தேங்குமே பாழ்மனம்
சினங்கொண்டு சீறி விழுமே
மெத்தமே நொந்துடல் வாடுமே நின்பதம்
வழுத்தின்பம் தேடி வருமே
எத்தனை முறையுனை யேத்தினும் அடியனுக்
கிரங்காத தன்மை யேனோ
தத்துமா மயிலுடன் தலைவனே வந்தருள்
தணிகைவளர் தம்பி ரானே.

தீராத பிணிதீர்க்கும் தெய்வீக வருளோடு
சிந்தைமகிழ்ந் தென்று முன்பால்
வாராத குறைதீர்த்து வறியருறு துயர்போக்கும்
வண்மையுடன் அறிவும் பொய்மை
சேராத வாய்மையொடு சீர்மேவு நல்வாழ்வுஞ்
செல்வனுனை வேண்டி நின்றேன்
யாராத நயனங்கள் பார்த்தரிய சேவைபெற
பரிந்தென்முன் வருக வெந்தாய்.

சந்ததமும் நின்பதம் சதமென்று நம்பினேன்
சண்முகா வேழை நாயேன்
சிந்தைமிக வாடினேன் செய்தகுறை செப்பினேன்
தீர்த்துவீ ணவல மெல்லாம்
நிந்தையற வாய்மையும் நிலைபெற்ற வாழ்வுமிந்
நேயனுக் குதவி யருள்வாய்
கந்தனெனு மீராறு கண்ணுடைய அண்ணலே!
கௌரியா ளீன்ற தேவே.

''முருகன் திருவடிகளே சரணம்''

---

## 'குருபரானந்த குகனே'

கண்டதும் கைகூப்பித் தொழுவதும் பின்புலகின்
கவலையினுள் மூழ்குவதுமே
காலமிதில் யான்செயும் கடமையெனக்கொ ண்டுனைக்
கண்டறியும் மார்க்கம்தெளியேன்

பண்டுமறை நூல்களைப் பாடிப்படித்துமனம் பக்குவம்
அடையும் என்றே
பார்த்துப் பல்லாண்டுகள் வீணே கழிந்தன
பலனொன்றும் யானடைகிலேன்

சண்டமாருதம் என்ன சுழலுதே நெஞ்சம் அது
சற்றேனும் நிற்க வேண்டின்
சத்தியம் சொல்லுவேன் சண்முகா அதுஉனருள்
தரம் ஒன்றில் முடியுமன்றோ

கொண்டல் வானத்தில்வர குயில்பாட மயிலாடக்
கொவ்வைச் செவ்வாய் திறக்கும்
கோலாகலக் குமர வேலனே எனையாளும்
குருபரானந்த குகனே.

---

'முருகன் பதிகம்' என்ற நூலில் எடுத்தது. மாணவப் பருவத்தில் திருக்குறளார் பாடியது.

# வாழ்க கவிஞர் திருக்குறளார்

தித்திக்கத் தேன் தமிழில் நகைச்சுவையுடன் திருக்குறள் கருத்துக்களைக் கடந்த ஐம்பதாண்டு கட்கு மேலாகத் தமிழர்கள் வாழும் நாடுகளில் பரப்பிவரும் கலைமாமணி, திருக்குறளார் வீ. முனிசாமி, பி.ஏ., பி.எல். அவர்கள் சிறந்த சொற்பொழிவாளர் என்பதை நாடறியும். பட்டப் படிப்பிற்குப் பயிலுங் காலத்திலே முதலில் கவிஞர் ஆகவே திருக்குறளார் முயன்றுள்ளார். அருளாளர் பாடிய ''பாடற்கினிய வாக்களிக்கும்'' எனும் பாடலை நாள்தோறும் பாடிவந்த பழக்கம் அவரை ஒரு பாடலாசிரியராகவே உருவாக்கியது. அவர் தம் முயற்சியின் பயனே 'முருகன் முறையீடு' என்னும் இம் முக்கனிச் சுவை பயன்தரும் நூல். 1935இல் வந்த நூலைத் தமிழக மக்களுக்காகத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மறுபதிப்புச் செய்துள்ளது. மேனாள் கழக ஆட்சியாளர் தாமரைத்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும் திருக்குறளாருக்கும் இருந்த பழம்பெருங்கேண்மையை நிலைப்படுத்தவே இச் சிறு வெளியீடு.

— கழகத்தார்